# சிலம்பின் ஆசிரியர் யார்?

(பகலவன்)





வெளியிடுபவர்: இரா. பாஸ்கரன்,
பிடாரி கோவில் தெரு,

## முன்னுரை.

சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டு மூலையில் கிடந்த கைப்பிரதி, இன்று உலகத் தமிழ் மாநாட்டையொட்டி அச்சேறி, உங்கள் கைகளில் காட்சியளிக்கிறது.

கருத்து மாறுபட்டவராக இருந்தாலும், எனது கைப்பிரதியைப் பரிசீலித்துத் தன்னுடைய வாதத்தை ஆணித்தரமாகத் தெரிவித்திருக்கிறுர் காலஞ்சென்ற அறிஞர் சாமி, சிதம்பரனுர் அவர்கள். அவர்கள் மதிப்புரையும் தாங்கி வருகிறது இக் கையேடு.

என்றே ஒரு நாள் நம்மில் பலர், சிலம்பு முழுமையும் படித்திருப்போம். பிறகு மணிமேகலையைப் படித் திருப்போம். இந்த நூலை ஆராய்ந்து பார்க்கு முன், ஒரு சிறு வேண்டுகோள். சிலம்பின் மூலம் முழுவதையும் படித்து, அதே மூச்சில், கால இடைவெளிவிடாது மணி மேகலையையும் படிக்க வேண்டுகிறேன். பிறகு இந்த நூலை ஆராயப்புகுமாறு தமிழறிஞர்களை வேண்டிக்கொள்கிறேன்.

சிலம்பின் ஆசிரியர் இளங்கோதானு? என்ற ஐயத்தின் விளைவே இந்நூல். இளங்கோ அல்லர் என்பது என் கருத்து. சாத்தனுர்தான் என்பது விளக்கப்படுகிறது.

பழமையிலும் புதுமை காணத் தயங்காத தூய உள்ளத்தினர்க்கு இந்நூல் சமர்ப்பணம்.

4—1—68. “பகலவன்”

*சாமி. சிதம்பரனுர் மதிப்புரை :*

## சிலப்பதிகார ஆசிரியரும்

## மணிமேகலை ஆசிரியரும்

## ஒருவரா ?

சிலம்பின் ஆசிரியர் யார்? என்ற தலைப்பில் நண்பர் பாஸ்கரன் அவர்கள் எழுதியிருக்கும் கட்டுரையைப் படித்தேன். சிலம்பு, மணிமேகலை இரண்டையும் ஆசிரியர் மிகவும் ஆழ்ந்து படித்திருக்கின்ருர். அந்த ஆழ்ந்த படிப்பின்மூலம் தன் உள்ளத்தில்பட்ட உண்மையை எழுத்துருவில் வெளியிட்டிருக்கின்ருர். உள்ளத்தில் தோன்றும் கருத்தை வெளியிடும் உரிமை ஒவ்வொருவருக்கும் உண்டு.

ஆனல் ஆசிரியர் கருத்து உண்மையானதுதான என்பதைத்தான் நாம் எண்ணிப் பார்க்கவேண்டும்.

இக்கட்டுரை ஆசிரியர் தம் கருத்துக்கு ஆதாரமாய்க் கொண்டிருப்பவை இரண்டு. ஒன்று "மணிமேகலை மேல் உரைப்பொருள் முற்றிய சிலப்பதிகாரம் முற்றும்" என்று சிலம்பின் இறுதியில் காணப்படும் தொடர்.

இரண்டு, மணிமேகலையிலும், சிலம்பிலும் உள்ள பல சொற்ருெடர்கள்; பல அடிகள், பல கருத்துக்கள் ஒன்ருக இருப்பவை.

இந்த இரண்டு ஆதாரவைக்கொண்டே, ஆசிரியர் சிலம்பின் ஆசிரியரும், மணிமேகலை ஆசிரியரும் ஒருவராகத்தான் இருக்கவேண்டும் என்று முடிவு கட்டுகிறார்.

இந்த முடிவை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. இது தவறு என்பதே எனது கருத்து.

1. சிலம்பின் ஆசிரியர் இளங்கோவடிகள் என்று கூறப்படுகிறார்; இளங்கோவைப் பற்றி வழங்கும் கதை உண்மையல்ல; வரலாற்றுக்குப் பொருத்தமாக இல்லை. சிலப்பதிகாரத்தைத் தவிர வேறு எதிலும் இளங்கோ வடிகளைப் பற்றிய வரலாறு காணப்படவில்லை. ஆயினும், சிலப்பதிகாரத்தை எழுதிய ஆசிரியர் பெயரை இளங்கோ வடிகள் என்று வைத்துக்கொள்வதில் தவறு எதுவும் இல்லை.

மணிமேகலை ஆசிரியர் "கூலவாணிகன் சாத்தன்" என்று கூறப்பட்டுள்ளார். சிலம்பின் ஆசிரியர் இளங்கோ வென்றும், மணிமேகலை ஆசிரியர் சாத்தனார் என்றுமே நீண்டகாலமாகப் புலவர்கள் நம்பியும், சொல்லியும் வருகின்றனர். பண்டைத் தமிழ்ப் புலவர்கள் யாரும் இதில் கருத்துவேற்றுமை காட்டவில்லை.

2. சிலம்பிலே காணப்படும் கவித்திறமையை மணிமேகலையில் காணமுடியவில்லை. இரண்டையும் ஒத்துப்பார்த்தால் சிலப்பதிகாரம் "நெஞ்சை அள்ளும்" ஆற்றல் படைத்திருக்கின்றது. மணிமேகலையில் இவ் வாற்றல் இல்லை.

3. சிலம்பில் பலவகைப் பாடல்கள் அமைந்திருக் கின்றன; ஆசிரியப்பா, வெண்பா, விருத்தப்பா, வரிப்

பாடல் முதலியவைகள் அடங்கியிருக்கின்றன. மணிமேகலை ஒரே ஆசிரியப்பாவால் இயன்றது.

4. ஆழ்ந்து ஆராய்ந்தால் ஒழிய இளங்கோவடிகளின் மதத்தைக் கண்டுபிடிக்க முடியாது. மணிமேகலை ஆசிரியர் புத்தமதத்தினர் என்பதில் ஐயம் இல்லை.

5. சிலம்பின் ஆசிரியர் எந்த மதத்தினரையும் வெறுக்கவில்லை. திருமாலைப்பற்றிப் பாடும்போது வைணவ அடியார் போல் காட்சி அளிக்கிறார். அருகரைப் பற்றிப் பாடும்போது அருகர் மயமாகவே காணப்படுகின்றார். சிவனைப்பற்றி, முருகனைப்பற்றி, ஐயையைப்பற்றியெல்லாம் பாடுகின்றார். ஏற்றத் தாழ்வின்றி எல்லாத் தெய்வங்களையும் பாடுகின்றார். மத வெறுப்போ தெய்வ நிந்தனையோ அவரிடம் இல்லை. மணிமேகலை புத்த தர்மத்தை விளம்பரம் செய்யும் நூலாகவே அமைந்திருக்கின்றது. ஏனைய மதங்களைவிடப் புத்த மதமே சிறந்ததென்று கூறுகின்றது. சைன மதத்தை வன்மையாகக் கண்டிக்கின்றது.

6. சிலம்பின் ஆசிரியர் பண்பாடும், மணிமேகலை ஆசிரியர் பண்பாடும் வெவ்வேறு. சிலம்பின் ஆசிரியரைப் போல் நடுநிலைமை வாய்ந்த ஒருவரைக் காணமுடியாது. எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்றங் கொடுத்துப் பேசும் அவர் உள்ளம் மாசு மறுவற்ற உள்ளம். வள்ளுவரைத்தான் சிலம்பின் ஆசிரியருக்கு உவமை கூறலாம்.

மணிமேகலை ஆசிரியரோ, பிடிவாதம் உள்ள புத்த மதத்தர். புத்த மதத்தைத் தவிர வேறு மதங்களை அவர்

மதிப்பதில்லை; அவைகளை யெல்லாம் அவர் தூக்கி எறிந்தே பேசுகின்றார்.

7. ஒரே ஆசிரியர் இரண்டு வாய்களை வைத்துக் கொண்டு பேசமுடியாது. அதிலும் பண்டைக் காலப் புலவர்களிடம் இத்தகைய தில்லு முல்லுகளைக் காண முடியாது. அவர்கள் தங்கள் கொள்கைகளைத்தான் வலியுறுத்துவார்கள். இரு வேறு போக்கிலே செல்லும் சிலம்பையும், மேகலையையும் ஒரே ஆசிரியர் எழுதினார் என்றால், அந்த ஆசிரியர் கொள்கையற்றவர்; பண்பாடில்லாதவர்; ஒழுக்கம் அற்றவர் என்றுதான் முடிவுகட்ட வேண்டும். பழம் புலவர்களில் இத்தகையவர்களைக் காணவே முடியாது. இந்த ஏழு காரணங்களையும் நன்றாக எண்ணிப்பார்க்கவேண்டும்.

இவைகளை யெல்லாம் எண்ணும்போது சிலம்பின் ஆசிரியரும், மேகலை ஆசிரியரும் ஒன்று என்று கருத என் உள்ளம் இடந்தரவில்லை.

மணிமேகலையும், சிலம்பும் ஒரே காலத்து நூல்தான். ஆயினும், மணிமேகலை முதலில் எழுதப்பட்டது. மணிமேகலை எழுதப்பட்ட பின்னர்தான் சிலம்பு எழுதப் பட்டது என்பது சில ஆராய்ச்சியாளர்கள் கருத்து.

மணிமேகலை மேல் உரைப்பொருள் முற்றிய
சிலப்பதிகாரம் முற்றும்

என்பது இவ்வுண்மையையே குறிப்பதாகும். "மணிமேகலையின் நிகழ்ச்சிக்கு முன், நடந்ததாக உரைக்கப்படும் பொருளைப்பற்றி எழுதிய சிலப்பதிகாரம் முடிந்தது என்பதுதான் இதன் பொருள்.

மணிமேகலை, சிலம்பு இரண்டிலும் சொற்கள், தொடர்கள், அடிகள், கற்பனைகள் ஒன்றாக இருப்பதில் புதுமை இல்லை.

ஒரு ஆசிரியருடைய கற்பனைகளையும், அடிகளையும், தொடர்களையும் மற்றொரு ஆசிரியர் அப்படியே எடுத்து ஆளுவது பழந்தமிழ்ப் புலவர்கள் மரபு.

திருக்குறளுக்குப் பின் தோன்றிய நூல்களில், திருக்குறளின் கருத்துக்களையும், அடிகளையும் அப்படி யப்படியே எடுத்து ஆண்டிருக்கின்றனர். கம்பரிடம் இதைக் காணலாம். மற்றும் பல புலவரிடமும் காணலாம். மணிமேகலையும், சிலப்பதிகாரமும் இதற்கு விலக்கல்ல.

சீவக சிந்தாமணியில் உள்ள கற்பனைகளைக் கம்பன் எடுத்துக்கொண்டிருக்கின்றான். கம்பன் கற்பனைகளை அவனுக்குப் பின்வந்தோர் கையாண்டிருக்கின்றனர். ஆகவே இம்முறை தமிழ்ப் புலவர்களின் பண்பாகும்.

சிலப்பதிகாரத்திலே பத்துப் பாட்டில் உள்ள சொற்றொடர்கள் அப்படியே எடுத்தாளப்பட்டிருக்கின்றன; புறநானூற்றில் உள்ள சொற்றொடர்கள் எடுத்தாளப்பட்டிருக்கின்றன; திருக்குறட் கருத்துக்களும், தொடர்களும் காணப்படுகின்றன. இவைகளைப் போலவேதான், மணிமேகலையில் உள்ள தொடர்களும், பொருள்களும் எடுத்தாளப்பட்டன என்பதில் வியப்பில்லை.

மணிமேகலையைப் படித்த பிறகே, சிலப்பதிகாரம் எழுதப்பட்ட காரணத்தால், மணிமேகலையில் உள்ள சொற்களும், தொடர்களும், அடிகளும், கற்பனைகளும்,

அப்படியோ, சிறிது மாறியோ சிலம்பில் ஏறியது புதுமை அன்று.

ஆகையால், சிலம்புக்கும், மேகலைக்கும் உள்ள, சொல், தொடர், அடி, கற்பனை ஒற்றுமைகளைக்கொண்டு இரண்டு நூல்களும் ஒரே ஆசிரியரால் இயற்றப்பட்டிருக்கவேண்டும் என்ற முடிவு முடிந்த முடிவாக இருக்கமுடியாது.

மேலே எடுத்துக்காட்டிய ஏழு காரணங்களையும் நன்ருகச் சிந்தித்து அதன் பிறகுதான், சிலம்பின் ஆசிரியரும், மேகலை ஆசிரியரும் ஒருவர்தாஞ என்று தீர்மானிக்க வேண்டும்.

இக் கட்டுரையாசிரியர் துணிவாகத் தனது முடிவை எழுதியிருப்பதைப் பாராட்டுகின்றேன். வெறுப்பு விருப்பின்றித் தாங்கள் கண்ட கருத்தை வெளியிடுவதனல் தமிழகத்தில் ஆராய்ச்சி அறிவு வளரும் என்பதில் ஐயம் இல்லை; இத்தகைய ஆராய்ச்சி, பலரையும் ஆராய்ச்சியிலே தலையிடத் தூண்டுவதாகும். கருத்து வேற்றுமைக்கு மதிப்புக் கொடுத்து விருப்பு வெறுப்பின்றி ஆராய்வதன் மூலந்தான் உண்மையான கருத்துரைகள்—ஆராய்ச்சி நூல்கள்-வெளிவரக்கூடும். இத்தகைய நன்மைக்கு வழிவகுத்திருக்கும் இவ்வாசிரியர், நண்பர் பாஸ்கரன் அவர்களின் முயற்சியைப் பாராட்டுகின்றேன். இவ்வாசிரியர் மூலம் உண்மையான ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை எதிர்பார்க்கின்றேன்.

எண். 3, 7வது தெரு,
சவுராஷ்டர நகர்,
சென்னை-24.

அன்பன்,
சாமி. சிதம்பரன்.
10—10—58.

# சிலம்பின் ஆசிரியர் யார்?

நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தை ஊன்றிப் படித்துக்கொண்டிருந்தேன். தெவிட்டாத தமிழமுதான அந்நூலின் இறுதிப் பகுதிக்கு வந்தேன். இறுதியாகக் கூறப்படும் "நூற்கட்டுரை"யின் இறுதி வரியைக் கண்ணுற்றேன்:

"மணிமேகலைமேல் உரைப்பொருள் முற்றிய
சிலப்பதிகாரம் முற்றும்"

என்று முடிகிறது.

இதன்பொருள்:- 'உரைக்க வந்த நூற்பொருள் இந். நூலில், சிலப்பதிகாரத்தில், முற்றுப்பெறவில்லை. வேறு ஒரு நூலான மணிமேகலையில் கூறவந்த உரைப்பொருள் முற்றும்!

தமிழ் இலக்கண வழக்குப்படி, ஒரு நூலை யியற்று வோன் தவிர்க்கவேண்டிய குற்றங்களில் 'குன்றக்கூறல்' என்பது ஒன்று. தான் கூறவிழைந்த உரைப்பொருளைத் தன்னுடைய நூலில் முழுமையுமாகக் கூருது, சாத்தனுர் எழுதியதாகக் கூறப்படும் இன்னெரு நூலான மணி மேகலையில் உரைப் பொருள் முற்றும் எனக் கூறுவது இலக்கண மரபிற்குப் பொருந்தாத ஒன்று

ஒரு சினிமாப்படத்தின் பாட்டுப் புத்தகத்தைக் கண்ணுற்றேன். அதன் முதற் பக்கத்தில் கதைச் சுருக்க மிருந்தது படித்தேன்.

"........கடைசியாக வில்லனது சூழ்ச்சியால் சிறைப் படுத்தப்பட்டகதாநாயகன் அங்கிருந்து தன் நண்பர்களின் உதவியால் தப்பிவிடுகிருன். கதாநாயகியும் வில்லனது ஆட்களால் அவனுடைய வீட்டிற்குத் தூக்கிச் செல்லப் படுகிருள். பின் நடந்தவை வெள்ளித் திரையில் காண்க"

"வெள்ளித்திரையில் காண்க என்று கூறி, கூறவந்த கதையை அறை குறையாகக் கூறுவது, கதையைப் படிப்பவர்களிடம், ஒருவித மயக்க வுணர்ச்சியைத் **(SUSPENSE)** தோற்றுவித்து அவர்களைப் படத்தைப் பார்க்கும்படி தூண்டுவதற்கேயாகும்.

அதுபோன்று,

"நான் இயற்றிய சிலப்பதிகாரத்தைப் படித்து விட்டீர்கள். அதில் நான் கூறவிழைந்த உரைப் பொருள் (சாத்தனரின்) மணிமேகலையில் முற்றும்"—என்று நூலை முடித்ததின் கருத்தென்ன.?

சிலப்பதிகாரத்தைப் படிப்பவர்களிடையே மணி மேகலையையும் படிக்கவேண்டும் என்ற ஆவலைத் தோற்றுவிக்கத்தானே?

∴ ∴ ∴ ∴

இன்னெருவருடைய நூலில் 'உரைப்பொருள் முற்றும்' என்றதால் சிலம்பின் ஆசிரியர் என்னை மயங்க வைத்தார். தமிழிலக்கண வழக்குப்படி 'மயங்கவைத்தல்' என்பதும் நூற் குற்றங்களில் ஒன்று.

சிலப்பதிகாரத்தைப் படித்து முடித்ததும் மணி மேகலையைப் படிக்கத் தொடங்கினேன். கால இடைவெளி சிறிதும் விடவில்லை. சிலப்பதிகாரத்தில் உள்ள சொற்கள் பல, சொற்றொடர்கள் பல, கருத்துக்கள் பல, நிகழ்ச்சிகள் வருணனைகள் பல,—அப்படியே நினைவிலிருந்தன். மணிமேகலையையும் படித்து முடித்தேன்.

ஒரு ஐயம் தோன்றியது. சிலம்பின் ஆசிரியர் இளங்கோ தானா? அல்லது சாத்தனாரா? என்பதே அந்த ஐயம்.

எவ்வளவு ஒன்றிப் பழகினாலும், எவ்வளவு ஒருமித்த கருத்துக்களைக் கொண்டிருந்தாலும், அக் கருத்துக்களை வெளியிடுபவர் தனக்கே உரித்தான இயல்பான பாணியில் தான் வெளியிட முடியும். தனக்கே உரித்தான சொற்கள், சொல்லும் முறைகள், இவைகளைக் கொண்டுதான் வெளியிட முடியும்.

அங்ஙனமிருக்கச், சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் வரும் கருத்துக்களும் அவைகளைத் தாங்கிவரும் சொற்களும், சொற்றொடர்களும், சொல்லும் முறைகளும் ஒருகவே உள்ளன. ஏராளமான சான்றுகள் கீழே தரப்பட்டுள்ளன. இரண்டு வேறு ஆசிரியர்கள் இயற்றியிருந்தால், சிறிதாவது சொற்களோ, சொல்லும் முறைகளோ மாறுபட்டிருக்கலாம் அல்லவா? அங்ஙனமில்லாதவிடத்து, ஐயம் எழத்தானே செய்யும்.?

இந்தக் காலத்தில்தான் கருத்துத் திருட்டும் எழுத்துத் திருட்டும் மலிந்துள்ளன. அன்றும் அப்படியாயிருந்தது?

பிறர் நூற்களிலிருந்து மேற்கோளாகச் சிலவரிகளை ஒருவர் தானியற்றும் நூலில் எடுத்தாள்வது தவறில்லை; அழகுங்கூட. சான்ருகப் புறநானூற்று அடிகளும் குறட்பாக்களும் கையாளப்பட்டுள்ளன. அவ்வா றில்லாது மிகச்சாதாரணமான, உயர்ந்த கருத்துக்களை உள்ளடக்கியில்லாத, சொற்ருெடர்கள், "டேப்ரிகாடு" போன்று இரண்டு நூல்களிலும் வந்தால், யார், யாருடைய நூலிலிருந்து "காப்பி" அடித்தார்கள் என்று கொள்வது?

பெரியார்களான இளங்கோவையோ, சாத்தனுரையோ "காப்பியடித்தார்கள்" என்றுகூறுவது இழுக்கு. மிக நெருங்கிய நண்பர்களான அவர்களில், ஒருவர் இன்னெருவருடைய நூலிலுள்ள எழுத்தையும் கருத்தையும் ஒருசேர எடுத்துத் தமது நூலில் கையாண் டிருந்தால் அவர்களுக்குள் தீராப்பகைமையும் வெறுப் புணர்ச்சியுமல்லவா ஏற்பட்டுவிட்டிருக்கும்?

சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையையும் ஒப்பிட்டுப் படிக்கத் தொடங்கினேன்.

எனக்குள் எழுந்த ஐயம் தீர்ந்தது. சிலம்பின் ஆசிரியரும் மணிமேகலையின் ஆசிரியரும் சாத்தனுரே, என்று முடிவுசெய்தேன். பல சான்றுகள், எனது முடிவை உறுதி செய்கின்றன.

'மணிமேகலையை'த் தமது நூலாகவும், சிலப் பதிகாரத்தைத் தமது நண்பரான இளங்கோவின் பெயராலும் ஆசிரியர் சாத்தனுர் எழுதி வெளியிட்டார். சிலப்பதிகாரத்தைப் படித்தவர்கள், அத்தோடு நின்று விடாமல், மணிமேகலையையும் படிக்கவேண்டும் என்ற

கருத்தோடுதான், சிலம்பின் இறுதியில், "மணிமேகலை மேல் உரைப் பொருள் முற்றிய சிலப்பதிகாரம் முற்றும்' என்று எழுதினர்.

இனிச் சான்றுகளுக்கு வருவோம் சிலப்பதிகாரத்தின் பதிகச் செய்யுளில்

'இளங்கோவடிகட்டு' (வரி 2.)
'உரைசால் அடிகள் அருள மதுரைக் 87.
கூலவாணிகன் சாத்தன் கேட்டனன்' 88.

துறவியான இளங்கோ, உண்மையிலேயே சிலம்பின் ஆசிரியராகவிருந்தால், "அடிகள்" "உரைசால் அடிகள்" என்றெல்லாம் தம்மைத் தாமே வியந்து கூறியிருக்க மாட்டார். இத்தகைய தற்புகழ்ச்சி அவருடைய துறவுக்கே இழுக்காகும்.

சிலம்பின் இறுதிக்காதையான 'வரந்தரு காதை'யில், தேவந்திமேல், கண்ணகித் தெய்வம் வந்து தோன்றி, இளங்கோவின் துறவு வரலாற்றை விளக்கமாக உரைக்கிறது. "சிந்தை செல்லாச் சேண்நெடுந்தூரத்து அந்தமில் இன்பத்து அரசாள் வேந்து" என்று இளங்கோவைப் புகழ்கிறது.

துறவியான இளங்கோ தன்னுடைய வாழ்க்கை வரலாற்றையும் பெருமையையும் இங்ஙனம் எழுதி யிருப்பாரா?

ஃ ஃ ஃ ஃ

கோவலன்—மாதவி குழந்தையான மணிமேகலை புகழ் எய்த வாழ்ந்தவள். உண்மையிலேயே இளங்கோ சிலம்பை இயற்றியிருந்தால், கோவலன் – மாதவி

உடனுறை வாழ்க்கையைச் சித்தரிக்கும் காதைகளில் மணிமேகலையைப்பற்றி ஒருவரிகூடக் குறிப்பிடாதிருக்கக் காரணமில்லை, கோவலன் – மாதவி வாழ்க்கையை வருணிக்கும் காதைகளான 'இந்திரவிழவூரெடுத்த காதை'யிலும் அதற்கு முன்னதான 'அந்திமாலைச் சிறப்புச்செய் காதையிலும், பிரிவிற்கான நிகழ்ச்சிகளை வருணிக்கும் 'கடலாடு காதை' 'கானல்வரி' இவற்றிலும் மணிமேகலையைப் பற்றி ஒரு சிறு குறிப்புக்கூட—மணிமேகலை பிறந்தாள் என்ற குறிப்புக்கூட இல்லை.

பிரிந்துவிட்ட கோவலனுக்குத் தோழி வயந்தமாலை மூலம் மாதவி ஓலை அனுப்புகிருள், திரும்பத் தன்னிடம் வரச்சொல்லி. அதிலாவது, ஒரு வரி மணிமேகலையைப் பற்றி குறிப்பிட்டிருக்கக்கூடாதா?

கோவலன், கண்ணகி, கவுந்தி மூவரும் சோழ நாட்டை விட்டுப் பாண்டிய நாடு சென்றுவிடுகின்றனர். மதுரைக்குப் புறத்தே உள்ள சேரியில் அவர்களை மாதவியின் தூதுவன் கௌசிகன் என்பான் சந்தித்து மாதவியின் கடிதத்தைக் கோவலனிடம் கொடுக்கிருன். கோவலன் பிரிவால் தான் எய்திய நிலையையும், கோவலனின் பெற்ருேர்கள் எய்திய நிலையையும் அக் கடிதத்தில் மாதவி விளக்குகிருள். அக் கடிதத்திலும் மணிமேகலையைப் பற்றிய குறிப்பு ஒன்றும் காணேம்.

மணிமேகலை பிறகு எங்கு குறிப்பிடப்படுகிருள் நூலின் பிற்பாதியில் அவளைப் பற்றிய குறிப்புக்களைக் காண்கிருேம்.

"அடைக்கலக் காதை"யில் வரும் மாடலன் கோவலனைச் சந்திக்கிருன். கோவலனைப் புகழுமுகத்தான்

அவனுடைய சென்றகால நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறு வதுடன், மணிமேகலை மாதவியிடத்துப் பிறந்ததையும், மணிமேகலையாம் குழந்தையை 'அணிமேகலையார் ஆயிரம் கணிகையர் மணிமேகலையென வாழ்த்திய ஞான்று' நடைபெற்றதான பல நிகழ்ச்சிகளையும் விவரிக்கிருன். பிறகு 'நீர்ப்படைக் காதை'யில் அதே மாடலன் செங்குட்டுவனிடம் மணிமேகலையின் துறவைப் பற்றிக் கூறுகிருன். 'வாழ்த்துக் காதை'யில், மணிமேகலை துறவை அடித்தோழி அரற்றுகிருள். கடைசியாக 'வரந்தரு காதை'யில் தேவந்தி செங்குட்டுவனிடம் மணிமேகலையின் துறவைக் கூறுகின்ருள்.

புகழ்வாய்ந்தவளான மணிமேகலையைப் பற்றி நன்கு கூறவேண்டிய இடத்தில் ஒன்றுமே குறிப்பிடாதிருந்து விட்டு, நூலிறுதிக் காதைகளில் சில குறிப்புக்களை மட்டும் கூறியதற்கு ஒரே காரணம்தான் இருக்கமுடியும்.

'மணிமேகலை' என்ற தனி நூலைத் தான் இயற்றப் போவதால்தான் சாத்தனுர் சிலப்பதிகாரத்தில் அவளைப் பற்றிய குறிப்புக்களை, விளக்கமாக, அதுவும் எதிர்பார்க்கக் கூடிய இடங்களில் கூருது விடுத்தார். சிலம்பை இசைத் தவர் இளங்கோ வென்ருல் இங்ஙனம் மணிமேகலையைப் பற்றிய குறிப்புக்களை நூலிறுதிக் காதைகளில் வருணித்த தோடு நின்றிருக்க மாட்டார். கோவலன் மாதவி உடனுறை வாழ்க்கை வருணனைப் பகுதிகளில் மணி மேகலை, கட்டாயம் இடம்பெற்றிப்பாள்.

∴ ∴ ∴ ∴

சிலம்பில் சோழரின் புகார் நகரமும், பாண்டியரின் மதுரையும் மிகவும் அழகாகவும், விளக்கமாகவும் வருணிக்கப் பட்டிருக்கின்றன; சேரரின் வஞ்சிநகர

வருணனை குறைவு, மணிமேகலையில் சேரரின் வஞ்சி அழகுடன் வருணிக்கப்படுகிறது; புகார், மதுரை வருணனைகள் குறைவு.

சிலம்பில் புகார் மதுரை நகர்களை நன்கு வருணித்து விட்டதால்; மணிமேகலையில் வஞ்சி நகரத்தை மட்டும் நன்கு வருணித்ததோடு நிறுத்திக்கொண்டார் சாத்தனர். சிலம்பில் புகார் வருணனையும் மணிமேகலையில் வஞ்சி வருணனையும் எழுத்துக்கு எழுத்து, வரிக்கு வரி அப்படியே ஒன்ருக இருக்கின்றன. ஒன்றில் இல்லாத புதுமை இன்னென்றில் இல்லை என்பதும் குறிப்பிட வேண்டிய செய்தியாகும்.

சிலம்பில் எங்ஙனம் 'இந்திர விழா', 'நாளங்காடிப் பூதம்', 'சதுக்கப் பூதம்' ஆகியன வருணிக்கப்படுகின் றனவோ, அதேபோன்று மணிமேகலையில் காணப்படு கின்றன. நாடக மகளிரின் பலகலைகள் சிலம்பின் 'அரங்கேற்று காதை'யில் எந்த வரிசையில் வருணிக்கப் படுகின்றனவோ, அதே வரிசையில் மணிமேகலை 'ஊரலருறைத்த காதை'யில் காணலாம்.

∴ ∴ ∴ ∴

முக்கியமான வருணனைப் பகுதிகள் மட்டுமல்ல; சாதாரணமான அடைச் சொற்கள், சாதாரணமான— உயர்ந்த கருத்தை உள்ளடக்கி யில்லாத,—வரிகள் கூட, அப்படியே இரண்டு நூல்களிலும் வருகின்றன. பல வரிகளின் இறுதியில், 'ஆயினும்' 'மறுகும்' 'இருக்கையும்' 'செய்குநர்' போன்ற பல சொற்கள் தொடர்ச்சியாக இரண்டு நூல்களிலும் காணலாம். 'கரந்துறை மாக்கள்' 'பாருகிடத்தல்' 'பைத்தரவல்குல்' 'ஏந்திள வனமுலை' 'இமையோர்' முதலியன இரண்டிலும் விரவிவரும்

சொற்களில் சில—ஒன்றில் 'தாயவேந்தர்' இன்னொன்றில் 'தாயமன்னவர்' ஆகிறது. இவ்வாறைந்தும், ஆறைம் பாட்டினுள் என்றும், இருமுக்காவதம், மூவிருகாவதம் என்றும், பல்கலன்கொண்டு, பெருங்கலன் சுமந்து என்றும், வியன்மலிமறுகும், நனந்தலை மறுகும் என்றும் சிறு மாறுதல்களுடனும் வருகின்றன.

∴ ∴ ∴ ∴

சாத்தனார் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து இளங்கோ நூலை யியற்றியதாக சிலம்பின் பதிகச் செய்யுளிறுதியில் காண்கிறோம்:

"இவ்வாறைந்தும்
உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்
உரைசால் அடிகள் அருள மதுரைக்
கூலவாணிகன் சாத்தன் கேட்டனன்"

அதேபோன்று இளங்கோவின் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து சாத்தனார் மணிமேகலையை யியற்றியதாக, மணிமேகலை பதிகச் செய்யுளிறுதியில் காண்கிறோம்:

"இளங்கோ வேந்தன் அருளிக்கேட்ப
வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
மாவண் தமிழ்த்திறம் மணிமேகலை துறவு
ஆறைம் பாட்டினுள் அறியவைத் தனனென்"

பதிகங்களில் மேலே கண்டவாறு குறிப்பிடப்பட்டிருக்கின்றன,—என்ற காரணத்திற்காக இரண்டிற்கும் வெவ்வேறு ஆசிரியர்கள்தாம் என்று முடிவுகட்டிவிட இயலவில்லை.

சிலம்பிலே பௌத்தம் நீங்கலாக ஏனைச் சமயங்களும் சமயமுதல்வர், கடவுளர்களும் புகழப்பட்டிருகின்றன. சிலம்பைச் சமண நூலாகக்கொள்ளவும் சான்றுகளில்லை. முதலில், கண்ணகி சமண மதத்தினளோ, தெய்வமோ அல்ல, இரண்டாவதாக அருகதேவன் எந்த அளவிற்குப் புகழப்படுகிறாரோ அதே அளவிற்கு இந்துக் கடவுளர் களான முருகன், திருமால், சிவன், கொற்றவை ஆகியோர் வருணிக்கப்பட்டுப் புகழப்படுகின்றனர்.

முதலில், பிறசமயவாதிகளின் கூற்றை விளக்கு முகத்தான் அவற்றைப்பற்றி மட்டும் சிலம்பில் கூறி விட்டு, பௌத்த சமய விளக்கங்களை மணிமேகலையில் தெளிவாகக் கூறுகிறார், சாத்தனார். பிற சமயங்களைப் பற்றிச் சிலம்பில் பொதுவாகக் குறிப்பிட்ட அவர், அச் சமயத்துவங்களைத் தர்க்கரீதியாக ஆராய்ந்து, அவற்றின் குறைகளை எடுத்துக்கூறி பௌத்தத்தைப் பெருமைப் படுத்துகிறார், மணிமேகலையில்.

∴ ∴ ∴ ∴

சிலம்பின் சுவைக்கு, மணிமேகலையின் சுவை எவ் வகையிலும் குறைந்தது அல்ல. ஒன்றின் கதை, எல்லோரையும் ஈர்க்கும் கதை; இன்னொன்று அப்படி யல்ல. "கோதைத்தாமம் குழலொடுகளைந்து போதித் தானம் புரிந்தறம் கொள்ளும்" மணிமேகலைக் கதையை எல்லோராலும் விரும்பமுடியாது. இசை நுணுக்கங்கள், நடனநூல் நுணுக்கங்கள் சிலம்பில் அதிகமாகவும் மணி மேகலையில் குறைந்தும் காணப்படுகின்றன. சமயக் கணக்கர்களின் பல நுண்கொள்கை விளக்கங்கள், மணிமேகலையில் அதிகமாகவுள்ளன. இசை, நடன நூல்களில் பயிற்சியற்றோர் எங்ஙனம் அவைபற்றிய

விளக்கங்களைச் சிலம்பில் சுவைக்க முடியாதோ, அது போன்று சமய நூற்களில் பயிற்சியற்றோர் அவைபற்றிய விளக்கங்களை மணிமேகலையில் சுவைக்க முடியாது.

ஒப்புமைப் பகுதிகளில் இரண்டொன்றை மட்டும் குறிப்பிடுவோம். ஒன்றில் வையை 'புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி, வையையென்னும் பொய்யாக் குலக்கொடி' என்றும் இன்னொன்றில் காவிரி, "கோடாச் செங்கோற் சோழர் தம் குலக்கொடி, கோள்நிலை திரிந்து கோடை நீடினும், தான் நிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை" என்றும் வருணிக்கப்பட்டுள்ளன. சிலம்பில் வேட்டுவ வரியைப் படிக்கும்பொழுது சாலினியில் மேல் தெய்வமேறி

"மறக்குடித்தாயத்து வழிவளஞ்சுரவாது
அறக்குடி போன்றவிந் தடங்கினர் எயினரும்"

என்று அரற்றும் பொழுது நம்மையறியாமலே நகைத்து விடுகிறோம். அதேபோன்று மணிமேகலை ஆதிரை பிச்சையிட்ட காதையில் சாதுவனை வரவேற்கும் குருமகன்,

"நம்பிக்கிளையவ்ளோர் நங்கையைத் தந்து
வெங்களும் ஊனும் வேண்டுவ கொடுமென"க்

கூறுகையிலும் அங்ஙனமே நகை எழுகிறது.

கடைசியாக, உயர்வு நவிற்சியணி விரவியுள்ள இவ்விரு நூல்களுமே சங்க காலத்தன அல்ல. களப்பிரர் காலத்திலும் இறுதிக் கட்டத்தில்தான் எழுதப்பட்டிருக்கக்கூடும். சங்க பிற்காலத்தன திருவிளையாடற் புராண பெரிய புராணக் கதைகளும் சங்க பிற்கால வட மொழித் தத்துவங்களும் சொற்களும் விரவியுள்ளமையே இதற்குச் சான்று.

சிலம்பு வாழ்க! மணிமேகலை வாழ்க!

இரண்டையும் ஆக்கிய சாத்தனார் வாழ்க!

கீழே காணப்படும் சொற்றொடர்கள், மிகவுயர்ந்த கருத்துக்களை உள்ளடக்கியுள்ளன என்று கூறமுடியாது. ஆகவே, புறநானூறு; திருக்குறள் ஆகிய பழைய நூற்களிலிருந்து மேற்கோளாகக் கையாளப்பட்டன,-என்று கூற இடமில்லாத மிகச் சாதாரணமான சொற்றொடர்கள். இளங்கோ, சாத்தனார் இருவரும் ஒரே காலத்தவராக இருக்கக் கீழ்க்கண்ட "ஈயடிச்சான் காப்பி", இருவருக்கு மிடையிலிருந்ததாகக் கூறப்படும் நட்பையல்லவா குலைத்துவிட்டிருக்கும் ?

ஒப்பிட்டுப் படிக்கவும்

| சிலப்பதிகாரம் | மணிமேகலை |
| --- | --- |
| காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர் | பன்மீன் விலைஞர் வெள்ளுப்புப் பகருநர் |
| மீன்விலைப் பரதவர் வெள்ளுப்புப் பகருநர் | கண்ணொடை யாட்டியர் காழியர் கூவியர் |
| பாசவர் வாசவர் பன்னிண விலைஞரோ | மைந்நிண விலைஞர் பாசவர் வாசவர் |
| டோசுநர் செறிந்த ஊன்மலி யிருக்கையும் | என்னுநகர் மறுகு மிருங்கோ வேட்களும் |
| கஞ்சகாரரும் செம்பு செய்குநரும் | செம்பு செய்ஞ்ஞரும் கஞ்ச காரரும் |
| மரங்கொல் தச்சரும் கருங்கைக் கொல்லரும் | பைம்பொன் செய்ஞ்ஞரும் பொன்செய் கொல்லரும் |
| துன்ன காரருந் தோலின் துன்னருங் | மரங்கொல் தச்சரும் மண்ணீட் டாளரும் |
| கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கிப் | வரந்தர வெழுதிய வோவிய மாக்களும் |
| பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களும் | தோலின் றுன்னருந் துன்ன வினைஞரும் |
| குழலினும் யாழினும் குரல் முதலேழும் | நலந்தரு பண்ணும் திறனும் வாய்ப்ப |
| வழுவின் றிசைத்து வழித்திறம் காட்டும் | நிலங்கலங் கண்ட நிகழக் காட்டும் |
| அரும்பெறன் மரபிற் பெரும்பாண் இருக்கையும் | பாணரென் றிவர் பல்வகை மறுகும் |
| ........................................................ | விலங்கரம் பொருஉம் வெள்வளை போழ்க்கரோடு |
| கோவியன் வீதியும் கொடித் தேர்வீதியும் | இலங்குமணி வினைஞரிரிய மறுகும் |

பீடிகைத் தெருவும் பெருங்குடி வாணிகர்
மாடமறுகும் மறையோ ரிருக்கையும்
விழ்குடி உழவரோடு விளங்கிய கொள்கை
ஆயுள்வேதருங் காலக்கணிதரும்
பால்வகை தெரிந்த பன்முறையிருக்கையும்
திருமணி குயிற்றுநர் சிறந்த கொள்கையோ
டணிவளை போழுநர் அகன்பெரு வீதியும்
சூதர் மாகதர் வேதாளிகரொடு
நாழிகைக் கணக்கர் நலம்பெறு கண்ணுளர்
காவற் கணிகையர் ஆடற் கூத்தியர்
பூவிலை மடந்தையர் ஏவற் சிலதியர்
பயில்தொழிற் குயிலுவர் பண்முறைக் கருவியர்
நகைவேழம் பரொடு வகைதெரி இருக்கையும்
கடும்பரி கடவுநர் களிற்றின் பாகர்
நெடுந்தேரூருநர் கடுங்கண் மறவர்
இருந்து புறஞ்சுற்றிய பெரும் பாயிருக்கையும்''

— புகார் வருணனை (24–56)

வேத்தியல் பொதுவிய லென்றிவ் விரண்டின்
கூத்தியல் பறிந்த கூத்தியர் மறுகும்
மாகதர் சூதர் வேதாளிகர் மறுகும்
போகம் புரக்கும் பொதுவர் பொலிமறுகும்
கண்ணுழைகல்லா நுண்ணூற்கைவினை
வண்ண வறுவையர் வளந்திகழ் மறுகும்
பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும்
பன்மணி பகர்வோர் மன்னிய மறுகும்
மறையோருந் தொழில் குறையா மறுகும்
அரசியன் மறுகுமமைச்சரின் மறுகும்
ஏனைப் பெருந்தொழில் செயஞேர் மறுகும்
மன்றமும் பொதியிலும் சந்தமும் சதுக்கமும்
புதுக்கோள் யானையும் பொற்றூர்ப் புரவியும்
கதிக்குற வடிப்போர் கவின் பெருவீதியும்''

— வஞ்சிவருணனை (31–61)

சிலம்பில் புகார், மதுரை வருணனைகள் அதிகம்; வஞ்சிவருணனை குறைவு. மணிமேகலையில் புகார், மதுரை, வருணனைகள் குறைவு; வஞ்சி வருணனை அதிகம்.

மேலும் காண்க

"தோரண நிலை இயதோமறு பசும்பொற்
பூரண கும்பத்துப் பொலிந்த பாலிகை
பாவை விளக்கு" (காதை 5)

"தோரண வீதியும் தோமறுகோட்டியும்
பூரண கும்பமும் பொலம் பாலிகைகளும்
பாவை விளக்கும்" (காதை 1)

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி" (கா. 5)

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி" (கா. 1)

எண். காதை எண்ணைக் குறிக்கும்

சிலப்பதிகாரம்

"தாரன் மாலையன் தமனியப் பூணினன்
பாரோர் காணுப்பலர் தொழு படிமையன்"(சி15)
"சுருளிடுதாடி மருள்படு பூங்குழல்" (சி. 27)
"நுதல்விழி நாட்டத் திறையோன்" (சி. 14)
"அரும்பெறல் மாமணி ஓங்குதிரைப்
பெருங்கடல் விழுத்தாற் போன்று" (சி. 30)
"ஊதுலைக் குருகின் உயிர்த்தன்" சி. 4
"மழைக்கரு வுயிர்க்கு
மறையோராக்கிய வாவுதி நறும்புகை" சி. 10
"திருவின் செய்யோள் ஆடியபாவையின் சி. 6

மணிமேகலை

"தாரன் மாலையன் தமனியப் பூணினன்
பாரோர் காணுப்பலர் தொழுபடிமையன்" ம. 3
"சுரியல்தாடி மருள்படு பூங்குழல்" ம. 3
"நுதல்விழி நாட்டத் திறையோன்" ம. 1
"ஓங்கிய நன்மணி யுறுகடல் வீழத்தோர்" ம. 2

"ஊதுலைக் குருகின் உயிர்து" ம. 2
"மழைவளந்தரூஉம் அழலோம் பாளன்" ம. 5

"திருவின் செய்யோள் ஆடிய பாவையின்"ம. 5

| | |
|---|---|
| “குருகுபெயர்க் குன்றம் கொன்ற நெடுவேலே சி. 24 | “குருகுபெயர்க் குன்றம் கொன்ற நெடுவேலே” ம. 5 |
| ”நால்வகைத் தேவரும் மூவறு கணங்களும்” சி. 5 | “நால்வகை மரபின ரூபப்பிரமரும்<br>……………………இருமூவகையிற்<br>பெருவனப் பெய்திய தெய்வத கணங்களும்”ம 6 |
| “திருவில் இட்டுத் திகழ்தரு மேனியன்” சி. 15 | “திருவில் இட்டுத் திகழ்தரு மேனியள் ம. 6 |
| “செய்வினை வழித்தாயுயிர் செலுமென்பது”சி 28 | செய்வினை மருங்கிற் சென்று பிறப்பெய்தல்” ம. 6 |
| “முறஞ்செவி வாரணம் முன்சம முருக்கிய<br>புறஞ்சிறை வாரணம் புக்கனர்” சி. 10 | “புகர்முக வாரணம் நெடுங்கூவிளிப்ப<br>பொறிமயிர் வாரணம் குறுங்கூவிளிப்ப” ம. 7 |
| பூப்பலிசெய்து காப்புக்கடை நிறுத்தி” சி. 28 | “கலம்பகர் பீடிகை பூப்பலி கடைகொள ம. 7 |
| “அருமணி இழந்த நாகம் போன்றதும்” சி-13 | “நன்மணி இழந்த நாகம் போன்று” ம. 7 |
| “இன்னுயிரிழந்த யாக்கை யென்ன” சி-13 | “இன்னுயிரிழந்த யாக்கையி னிருந்தனள்”ம. 7 |
| “தளர்ந்த நடையிற்றண்டு காலூன்றி<br>வளைந்த யாக்கை மறையோன்” சி. 15 | “தளர்ந்த நடையிற்றண்டு காலூன்றி<br>வளைந்த யாக்கை மறையோன்” ம. 14 |
| “சுடுமண் ஏருவடுநீங்கு சிறப்பின்” சி. 14 | “சுடுமண் ஏற்றி அரங்குசூழ்போகி” ம. 18 |
| ‘தருமணல் ஞெமிரியதிருநகர் முற்றத்து”சி.14<br>‘ | “தருமணல் ஞெமிரிய திருநாறு<br>ஒருசிறை” ம. 18 |
| “நோற்றுணல் யாக்கை நொசிதவத்தீர்” சி. 10 | “நோற்றாண் வாழ்க்கை பொசிதவத்தீர்”ம. 18 |

| | |
|---|---|
| "குங்கும வருணங் கொங்கையினிழைப்போர்" | "குங்கும வருணங் கொங்கையினிழைப்போர்" |
| "அருந்திறலர்சன் முறைசெயினல்லது [சி. 4<br>பெரும்பெயற் பெண்டிற்குக் கற்புச்<br>சிறவாது" சி. 28 | "மாதவர் நோன்பும் மடவார் கற்பும் [ம. 19<br>காவலன் காவலின்றெனிலின்ருல்" ம. 22 |
| "பூவாவஞ்சியிற் பூத்த வஞ்சி" சி. 26 | "பூத்தவஞ்சி பூவாவஞ்சியில்" ம. 26. |
| "பால்வகை தெரிந்த பகுதிப்பண்டமொடு<br>கூலங்குவித்த கூல வீதியும்" சி. 5 | "பால்வேருக வெண்வகைப்பட்ட<br>கூலங்குவை இயகூல மறுகும்" ம. 28 |
| "பத்தினித் கோட்டப் படிப்புறம் வகுத்து<br>நித்தல் விழாவணி நிகழ்கென்றேவி" சி. 30 | "பத்தினிக் கோட்டமும் சமைத்து<br>நித்தல் விழாவணி நிகழ்வித்தோனே" ம. 21 |